10445





**Department of Examinations, Sri Lanka**

**අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු**
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்**
**General Certificate of Education (Adv. Level) Examination, August 2016**

| | | |
|---|---|---|
| ඉස්ලාම් I<br>**இஸ்லாம் I**<br>Islam I | **44 T I** | පැය දෙකයි<br>**இரண்டு மணித்தியாலம்**<br>*Two hours* |

**அறிவுறுத்தல்கள் :**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** இஸ்லாத்தின் முதற் பிரசாரம் இடம்பெற்ற மலைச்சாரல்
(1) ஹிரா (2) ஸபா (3) மர்வா (4) அறபா (5) ஸவ்ர்

**2.** 'முவத்தா' என்ற நூலின் ஆசிரியர் மரணித்த இடம்
(1) மக்கா (2) கூபா (3) திமிஷ்க் (4) மதீனா (5) பஸரா

**3.** இஸ்லாமிய வரலாற்றில் அகீதா தொடர்பான பல பிரிவுகள் தோன்றின. அவற்றுள் முதலில் தோன்றிய பிரிவு
(1) அஷ்அரிய்யா (2) ஷீஆ (3) மு.்.தஸிலா
(4) கவாரிஜ் (5) வஹ்ததுல் வுஜூத்

**4.** பின்வரும் தொழுகைகளில் குத்பா **இடம்பெறாதது**
(1) ஜும்ஆ (2) இஸ்திஸ்கா (3) ஈதைன்
(4) தஸ்பீஹ் (5) குஸூபைன்

**5.** நீர் வழிந்தோடும் இலங்கையின் இயற்கை வனப்பைக் கண்ட அரேபியர் அதற்கு ஒரு பெயர் சூட்டினர். அது
(1) ஸரந்தீப் (2) தப்ரபேன் (3) அஸ்-ஸைலான்
(4) சிலோன் (5) அல்ஜஸீரா

**6.** மஸ்ஜிதில் இடம்பெறும், நபி (ஸல்) அவர்கள் செய்துகாட்டிய செயற்பாடுகளில் மிகப் பிரதானமானது
(1) தொழுதல் (2) அல்-குர்ஆன் ஓதுதல் (3) கல்வி கற்றல்
(4) இ.்.திகாப் இருத்தல் (5) திக்ர் செய்தல்

**7.** அஜ்னபீயான பெண்ணுடன் தனித்திருப்பது
(1) மக்ருஹ் (2) ஜாஇஸ் (3) மன்தூப் (4) ஹராம் (5) முஸ்தஹப்

**8.** ஒரு முஜ்தஹித் குழுவினர், குறித்த ஒரு பிரச்சினை தொடர்பாக ஒரு கருத்தை முன்வைக்க, அதனை வேறு எந்த முஜ்தஹித்களும் மறுக்காமலும் கருத்து வெளியிடாமலும் இருக்கும் நிலையில் தோன்றுவது
(1) இஜ்மா ஸரிஹ் (2) இஜ்மா ஸுகூத்தி
(3) இஜ்மா அக்ஸரிய்யா (4) இஜ்மா முரக்கப்
(5) இஜ்மா கௌலி

**9.** நபி (ஸல்) அவர்களது காலத்தில் முஸ்லிம்கள் ஹிஜ்ரத் சென்ற இரு பிரதேசங்கள்
(1) மக்கா, மதீனா (2) தாயிப், யெஸ்ரிப்
(3) ஹபஷா, யெஸ்ரிப் (4) ஹுதைபியா, கைபர்
(5) ஷாம், ஈராக்

**10.** பின்வருவனவற்றுள் 'பர்ளு கிபாயா' **அல்லாதது**
(1) மருத்துவர் ஒருவர் இருத்தல்
(2) தகைமையுடைய ஆலிம் ஒருவர் இருத்தல்
(3) ஜனாஸாவுக்குரிய கடமைகளை நிறைவேற்றுதல்
(4) தினமும் தொழுதுவரும் ஆபித் ஒருவர் இருத்தல்
(5) பொதுச் சுகாதார வசதிகளைச் செய்து கொடுத்தல்

[பக். 2 ஐப் பார்க்க

**11.** 'தஸ்கியதுந் நப்ஸ்' என்பது,
(1) உள்ளத்தை ஒழுங்குபடுத்தும் பணியைக் குறிக்கின்றது.
(2) உடலைப் பக்குவப்படுத்தும் பணியைக் குறிக்கின்றது.
(3) ஆன்மாவைப் பக்குவப்படுத்தும் பணியைக் குறிக்கின்றது.
(4) தஸவ்வுப் துறையை விரிவுபடுத்துவதைக் குறிக்கின்றது.
(5) வாழ்வை ஒழுங்குபடுத்துவதைக் குறிக்கின்றது.

**12.** அல்லாஹ்வின் திருநாமங்களில் 'அல்-அஹத்' என்பதனால் வெளிப்படுத்தப்படுவது, அவனது
(1) ஏகத்துவம் ஆகும். (2) பரோபகாரம் ஆகும்.
(3) வல்லமை ஆகும். (4) இரக்கத்தன்மை ஆகும்.
(5) ஆட்சி அதிகாரம் ஆகும்.

**13.** பின்வருவனவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) முல்ஹித் இறைவனை ஏற்பவன்; முஷ்ரிக் இறைவனை மறுப்பவன்.
(2) முல்ஹித் அறிவுள்ளவன்; முஷ்ரிக் அறிவில்லாதவன்.
(3) முல்ஹித் இறைவனை மறுப்பவன்; முஷ்ரிக் இறைவனை ஏற்பவன்.
(4) முல்ஹித் இறைவனை நிராகரிப்பவன்; முஷ்ரிக் இறைவனுக்கு இணை வைப்பவன்.
(5) முல்ஹித் புதிதாக உருவானவன்; முஷ்ரிக் பண்டைய காலம் முதல் இருப்பவன்.

**14.** கலீபா உஸ்மான் (ரழி) அவர்கள் 'ஜாமிஉல் குர்ஆன்' என அழைக்கப்படுவதற்கான காரணம்
(1) அவர்கள் முழு அல்-குர்ஆனையும் மனனம் செய்திருந்தமை
(2) குத்தாபுல் வஹீகளில் ஒருவராக இருந்தமை
(3) அல்-குர்ஆனைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டமை
(4) அல்-குர்ஆன் மூலம் முஸ்லிம்களை ஒன்றுபடுத்தியமை
(5) அல்-குர்ஆன் முஸ்ஹப் உஸ்மானியை பிரபல்யப்படுத்தியமை



**15.** 'ஸஹாபி' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்படுவோர்
(1) நபி (ஸல்) அவர்களின் காலத்தில் வாழ்ந்தோர்
(2) நபி (ஸல்) அவர்களை நேரில் சந்தித்த முஸ்லிம்கள்
(3) ஹிஜ்ரி முதல் அரை நூற்றாண்டில் வாழ்ந்தோர்
(4) ஹிஜ்ரி இறுதி அரை நூற்றாண்டில் வாழ்ந்தோர்
(5) ஹிஜ்ரி முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்த முஸ்லிம்கள்

**16.** தர்தீப் திலாவத், தர்தீப் நுஸூல் என்பன குறிப்பன, முறையே அல்-குர்ஆன்
(1) அருளப்பட்ட முறையையும் ஓதப்படும் முறையையும் ஆகும்.
(2) ஓதப்படும் முறையையும் அருளப்பட்ட முறையையும் ஆகும்.
(3) அருளப்பட்ட முறையையும் எழுதப்பட்ட முறையையும் ஆகும்.
(4) தொகுக்கப்பட்ட முறையையும் ஓதப்பட்ட முறையையும் ஆகும்.
(5) ஒழுங்குபடுத்தப்பட்ட முறையையும் ஓதப்படும் முறையையும் ஆகும்.

**17.** ஹதீஸ்களில் மிக உயர்ந்த தரத்தில் கணிக்கப்படுபவை
(1) முதவாதிர் (2) ஸஹீஹ் (3) ஹஸன் (4) மவ்ளூ-ஆத் (5) மர்பூ.

**18.** பின்வருவனவற்றுள் மதனீ ஸூராவுடன் தொடர்புடைய கூற்றைத் தெரவுசெய்க.
(1) சிறிய அத்தியாயங்களைக் கொண்டவை.
(2) ஓசை நயம் மிகைத்துக் காணப்படுபவை.
(3) கடமைகள், சட்டங்கள் பற்றி பிரஸ்தாபிப்பவை.
(4) அகீதா பற்றி விளக்குபவை.
(5) ஹுரூபுல் முகத்த ஆத்தைக் கொண்டவை.

**19.** இஸ்லாமிய அகீதாவின் தூய்மையைப் பாதுகாக்க பங்களிப்புச் செய்த இமாம்
(1) இமாம் ஷாபிஈ (ரஹ்) (2) இமாம் ஸுயூத்தீ (ரஹ்)
(3) இமாம் தபரி (ரஹ்) (4) இமாம் இப்னு கஸீர் (ரஹ்)
(5) இமாம் அபுல்ஹஸன் அல் அஷ்அரி (ரஹ்)

**20.** அல்லாஹ்வின் வாஜிபான ஸிபத்துகளை உள்ளடக்கிய தொகுதி
(1) வுஜூதுன், ஹய்யுன், ஆலிமுன், ஜஹ்லுன்
(2) ஹயாத்துன், மௌதுன், காதிருன், ஸம்உன்
(3) கிதமுன், காதிருன், ஸம்உன், பஸருன்
(4) இராததுன், குத்ரதுன், அஜ்ஸுன், பகமுன்
(5) ஜஹ்லுன், பகமுன், அஸம்மு, கியாமுஹு பினப்ஸிஹி

**36.** பிரபலமான ஹதீஸ் கலை அறிஞர்களாகக் குறிப்பிடப்படக்கூடியோர், இமாம்களான
(1) புஹாரி, முஸ்லிம், நஸாஈ, இப்னு ஹஜர்
(2) அபூதாவூத், ஸுயூத்தி, திர்மிதீ, இப்னுல் கையும்
(3) புகாரி, முஸ்லிம், திர்மிதீ, அபூதாவூத்
(4) புகாரி, முஸ்லிம், அபூதாவூத், கஸ்ஸாலி
(5) நஸாஈ, ஸுயூத்தி, நவவி, திர்மிதீ

**37.** திருமண ஒப்பந்தமொன்றைச் சட்டரீதியாக நிறைவேற்றுவதற்குத் தேவைப்படும் ஷாஹித் எனப்படுபவர்
(1) ஊர் தலைவர் (2) மணமகனின் தந்தை (3) நிகாஹ் பதிவாளர்
(4) சாட்சியாளர் (5) பள்ளிவாசலின் இமாம்

**38.** இஸ்லாமிய வரலாற்றில் பல சிந்தனைப் பிரிவுகள் தோற்றம் பெற்றன. அவற்றுள் கவாரிஜ் எனப்படுவோர்
(1) அஹ்லுபைத்களை ஆதரிப்போர் (2) கலீபா உஸ்மான் (ரழி) மீது குற்றம் சுமத்தியோர்
(3) ஜமல் யுத்தத்தில் பங்கு கொண்டோர் (4) அபூபக்கர் (ரழி) அவர்களின் காலத்தில் மதம் மாறியோர்
(5) ஸிப்பீன் யுத்தத்தின்போது கருத்து முரண்பாடு கொண்டு அலி (ரழி) அவர்களின் அணியிலிருந்து வெளியேறியோர்

**39.** ஒருவர் தனது மனைவியை உடல்ரீதியாக தன் தாய்க்கு ஒப்பிடுவதன் மூலம் ஏற்படும் மணமுறிவு
(1) ஈலா஼ (2) பிராக் (3) லிஆன் (4) லிஹார் (5) பாஇன்

**40.** இலங்கை முஸ்லிம்களின் வரலாற்றோடு தொடர்பான முக்கிய தகவல்களைத் தரும் நூல்களாவன:
(1) ஸஹீஹுல் புகாரி, ரியாளுஸ் ஸாலிஹீன் (2) அஜாஇபுல் ஹிந்த், புதூஹுல் புல்தான்
(3) தாரீஹுல் கபீர், தாரீஹுர் ருஸுல் வல்முலூக் (4) கிதாபுல் உம்மு, அஹ்காமுஸ் ஸுல்தானியா
(5) புதூஹுல் புல்தான், மிஷ்காதுல் மஸாபீஹ்

● **41** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள சோடிக் கூற்றுகளுக்குப் பின்வரும் (1), (2), (3), (4), (5) என்பனவற்றில் மிகப் பொருத்தமானதைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தைக்** குறிப்பிடுக.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | பிழையானது | சரியானது |
| (3) | சரியானது | பிழையானது |
| (4) | பிழையானது | பிழையானது |
| (5) | சரியானது | முதலாம் கூற்றை மேலும் விளக்குகிறது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **41.** | ஆண்கள் பட்டும் தங்கமும் அணிவது தடுக்கப்பட்டுள்ளது. | தங்கமும் பட்டும் பெண்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. |
| **42.** | யா அய்யுஹன்னாஸ் என விளிப்பவை 'மதனி' வசனங்களாகும். | யா அய்யுஹல்லதீன ஆமனூ என விளிப்பவை மக்கி வசனங்களாகும். |
| **43.** | முஃதஸிலாக்கள் 'அஹ்லுத்தவ்ஹீத் வல் அத்ல்' என தம்மை அழைத்துக்கொண்டனர். | வாஸுல் பின் அதா ஹஸனுல் பஸரீ (ரஹ்) அவர்களுடன் வாதிட்டார். |
| **44.** | உலக முடிவுக்கான எல்லா அடையாளங்களும் முழுமையடைந்துவிட்டன. | பிரதான இபாதத்துகளை அலட்சியம் செய்தாலும் மறுமையில் விமோசனம் உண்டு. |
| **45.** | ஹதீஸின் உண்மைத்தன்மையைப் புரிந்துகொள்ள மதன் மட்டும் போதுமானதல்ல. | அஸ்மா உர்ரிஜால் என்பது ஹதீஸின் மதன் பற்றி ஆராயும் கலையாகும். |
| **46.** | அய்யாமுத் தஷ்ரிக் நாட்களில் நோன்பு நோற்பது ஹராமாகும். | துல்ஹஜ்ஜ் மாதம் பிறை 11, 12, 13 நாட்களில் நோன்பு நோற்பது தடை செய்யப்பட்டுள்ளது. |
| **47.** | 'இஜாரா' என்பது வியாபாரத்தில் நற்கடனைக் குறிக்கிறது. | 'ஸலம்' என்பது தடுக்கப்பட்ட வியாபார முறையொன்றாகும். |
| **48.** | உடலுறவு கொள்ளப்படாத நிலையில் தலாக் சொல்லப்பட்டாலும் இத்தா அனுஷ்டிப்பது கட்டாயமாகும். | கர்ப்பிணியான பெண்ணின் கணவன் இறந்தால் அவள் 4 மாதமும் பத்து நாட்களும் இத்தா அனுஷ்டிக்க வேண்டும். |
| **49.** | கலீபா அபூபக்கர் (ரழி) அவர்கள் தனது பிரதம நீதியரசராக உமர் (ரழி) அவர்களை நியமித்திருந்தார். | உமர் (ரழி) அவர்கள் அதிகாரிகளை மேற்பார்வை செய்ய முஹம்மத் பின் மஸ்லமா (ரழி) அவர்களை நியமித்திருந்தார். |
| **50.** | நல்ல நோக்கமொன்றிற்காக ஹராமான ஒன்றைச் செய்வதில் தவறில்லை. | செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன. |

* * *

● **21** தொடக்கம் **25** வரையிலுள்ள ஒவ்வொரு வினாவிலும் **X, Y** என்னும் நிரல்களின் கீழ் தரப்பட்டுள்ள தகவல்கள் ஏதேனும் ஒரு வகையில் ஒன்றுடனொன்று தொடர்புபட்டவை. அதன்படி **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுடன் சரியாகத் தொடர்புபடுத்தும்போது பொருத்தமாக அமையும் சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**21.**

| X | Y |
|---|---|
| (i) அகீதா | A – ஸுஹ்ரி |
| (ii) ஹதீஸ் | B – அஷ்அரி |
| (iii) தப்ஸீர் | C – ஷாபிஈ |
| (iv) பிக்ஹு | D – தபரி |

(1) A B C D (2) B A D C (3) B C D A (4) B D A C (5) C D B A

**22.**

| X | Y |
|---|---|
| (i) லைலதுல் மி'.ராஜ் | A – ஷவ்வால் - 01 |
| (ii) யவ்முல் அரபா | B – முஹர்ரம் - 10 |
| (iii) யவ்முல் ஆஷுரா | C – துல்ஹஜ் - 09 |
| (iv) ஈதுல் பித்ர் | D – ரஜபு - 27 |

(1) A B C D (2) B C D A (3) B D C A (4) C D B A (5) D C B A

**23.**

| X | Y |
|---|---|
| (i) தவ்ராத் | A – சுலைமான் (அலை) |
| (ii) ஜாலூத் | B – இப்ராஹீம் (அலை) |
| (iii) பல்கீஸ் | C – தாவூத் அலை |
| (iv) நும்ருத் | D – மூஸா (அலை) |

(1) A B C D (2) B C D A (3) B D A C (4) D C A B (5) D C B A

**24.**

| X | Y |
|---|---|
| (i) ரிழா | A – வகாலா |
| (ii) ரிபா | B – தஸ்கியா |
| (iii) ரஹ்ன் | C – குல்உ |
| (iv) தலாக் | D – ஹராம் |

(1) B D A C (2) B D C A (3) C A B D (4) D A C B (5) D B A C

**25.**

| X | Y |
|---|---|
| (i) முஹ்கம் | A – மாற்றப்பட்டவை |
| (ii) மன்ஸுக் | B – இறங்கியதற்கான காரணம் |
| (iii) ஸப்உல் மதானி | C – தெளிவான வசனம் |
| (iv) ஸபபுந் நுஸுல் | D – ஸுரா பாதிஹா |

(1) A B D C (2) A C B D (3) B A D C (4) B D A C (5) C A D B

● **26** தொடக்கம் **30** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் ஆங்கில எழுத்துகளினால் தரப்பட்டுள்ள விடயங்களைக் கவனத்திற் கொண்டு கேட்கப்பட்டுள்ள வினாக்களுக்கு விடையளிக்குக.

**26.** குப்ர், நிபாக் என்பன தொடர்பான சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

A - அல்லாஹ்வை ஏற்க மறுத்தல்
B - நரகத்தின் கீழ் தட்டில் நிரந்தரமாகத் தங்குதல்
C - பொய், வாக்கு மீறல், நம்பிக்கைத் துரோகம்
D - அல்லாஹ்வின் சட்டங்களை நிராகரித்தல்
E - உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுதல்
F - இஸ்லாத்தின் கடமைகளை மறுத்தல்

மேற்கூறப்பட்டவற்றுள் குப்ருடன் தொடர்புடைய கூற்றுகள் யாவை ?

(1) A, B, C (2) A, D, F (3) B, C, E (4) B, C, F (5) B, E, F

[பக். 4 ஐப் பார்க்க

**27.** அல்லாஹ்வின் பிரதிநிதி என்ற வகையில் மனிதன் நிறைவேற்ற வேண்டிய இபாதத், இமாரத், கிலாபத் பணிகள் கீழே தரப்பட்டுள்ளன.

A - இயற்கை வளங்களைப் பாதுகாத்தல்
B - அல்லாஹ்வின் சட்டங்களை நிராகரித்தல்
C - தொழுகை முதலான கட்டாய கடமைகளை நிறைவேற்றல்
D - மனித உரிமைகளைப் பாதுகாத்தல்
E - சுற்றுச்சூழலை வளப்படுத்தல்
F - பிள்ளைகள் பெற்றோருக்குச் செய்ய வேண்டிய கடமைகள்

இவற்றுள் இமாரத் பணிகள் யாவை ?
(1) A யும் B யும் (2) A யும் E யும் (3) B யும் D யும் (4) B யும் F யும் (5) C யும் D யும்

**28.** பின்வரும் விடயங்களைக் கவனத்திற் கொள்க.

A - இஸ்லாம் அல்லாஹ்வினால் அருளப்பட்ட வாழ்க்கை முறையாகும்.
B - இஸ்லாம் இவ்வுலக வாழ்வை குறிக்கோளாகக் கொண்டது.
C - அது தவ்ஹீத், ரிஸாலத், மஆத் என்ற அடிப்படைகளைக் கொண்டது.
D - அதில் தனி மனிதனுக்குச் சுதந்திரம் இல்லை.
E - அது வாழ்வின் எல்லாத் துறைகளுக்கும் வழிகாட்டுகிறது.
F - அநாதைகளின் சொத்துகளை அபகரித்தல், போதைப்பொருள் பாவனை போன்றன பாவங்களாகக் கருதப்படுவதில்லை.

மேலுள்ளவற்றுள் இஸ்லாத்தின் சிறப்பம்சங்களாவன:
(1) A, B, C (2) A, C, E (3) A, D, F (4) B, C, D (5) B, D, F

**29.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - காஸாவில் பிறந்தவர்.
B - 'பிக்ஹுல் அக்பர்' என்ற நூலின் ஆசிரியராவார்.
C - உஸுலுல் பிக்ஹ் கலையின் முன்னோடியாவார்.
D - 'ஆலிமுல் குறைஷ்' என்ற சிறப்புப் பெயரைக் கொண்டவர்.
E - ஹனபீ மத்ஹபின் ஸ்தாபகர்.
F - இஸ்திஹ்ஸானை அதிகம் பயன்படுத்தியவர்.

இவற்றுள் இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்களுடன் தொடர்புடைய கூற்றுகளைக் கொண்ட தொகுதி
(1) A, B, D (2) A, C, D (3) B, C, F (4) C, D, E (5) D, E, F

**30.** அரபிகள் புராதன இலங்கையுடன் கொண்டிருந்த தொடர்புகள் பற்றிய சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

A - அக்ரபோதி மன்னனின் தூதுக் கோஷ்டி மதீனா சென்று வந்தமை
B - இலங்கையில் வாசனைத் திரவியங்கள் தாராளமாகக் கிடைத்தமை
C - பாதுகாப்பான துறைமுகங்கள் காணப்பட்டமை
D - பனூ ஹாஷிம்கள் இலங்கைக்கு வருகை தந்தமை
E - சுதேச மன்னர்களின் ஆதரவு கிடைத்தமை
F - அரபிகளின் கடல் பயணப் பாதையில் தங்குமிடமாக அமைந்தமை

இவற்றுள் இஸ்லாத்தின் தோற்றத்திற்கு முன்பே அரபிகள் இலங்கையுடன் தொடர்பு கொண்டமைக்கு ஏதுவாகிய காரணிகள்
(1) A, B, D, E (2) A, C, D, F (3) A, C, E, F (4) B, C, E, F (5) C, D, E, F

- **31** தொடக்கம் **35** வரையுள்ள வினாக்களில் உள்ள சொற்களில் இரண்டு சொற்கள் ஏனைய இரண்டு சொற்களுடன் ஏதோவொரு வகையில் தொடர்பினைக் கொண்டுள்ளன. அவ்வாறான தொடர்பினைக் **கொண்டிராத** எஞ்சிய சொல்லைத் தெரிவுசெய்க.

**31.** (1) அஸ்மா (ரழி) (2) ஆயிஷா (ரழி) (3) பாத்திமா (ரழி)
(4) ஹஸன் (ரழி) (5) ஹுஸைன் (ரழி)

**32.** (1) இப்ராஹீம் (அலை) (2) ஸுலைமான் (அலை) (3) யூஸுப் (அலை)
(4) ஹாஜர் (5) பல்கீஸ்

**33.** (1) தஹாவி (2) ஷாபிஈ (3) ஹம்பலி
(4) ஹம்மாத் (5) நுஃமான்

**34.** (1) ஸூரா கஹ்பு (2) ஸூரா பாதிஹா (3) ஸூரா பகரா
(4) ஸூரா பலக் (5) ஸூரா நாஸ்

**35.** (1) பித்அத் (2) முஃதஸிலா (3) இஸ்னா அஷ்ரிய்யா
(4) வாஜிப் (5) ஹராம்

[பக். 5 ஐப் பார்க்க

10445

AL/2016/44/T-II





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ඉස්ලාම් II
இஸ்லாம் II
Islam II

44 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி I இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி II இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** முஸ்லிம் சமூக வாழ்வில் பின்வருவனவற்றின் முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுக.
- (i) நபி (ஸல்) அவர்களின் வழிகாட்டல்
- (ii) தலைமைத்துவம்
- (iii) மஸ்ஜித்
- (iv) குடும்பம்



**2.** பின்வருவன பற்றி விளக்கக் குறிப்பு எழுதுக.
- (i) கத்முந் நுபுவ்வா
- (ii) தப்ஸீர் ம∴ஸூர்
- (iii) இத்தா
- (iv) அல்-உர்பு

**3.** சட்ட மூலாதாரங்கள் தொடர்பாக பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.
- (i) நபி (ஸல்) அவர்களின் காலப்பிரிவில் அல்-குர்ஆன் **தொகுக்கப்படாமைக்கான** காரணங்களைத் தருக.
- (ii) ஸஹாபாக்கள் காலத்தில் அல்-குர்ஆனைத் தொகுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட சூழ்நிலையை விளக்குக.
- (iii) பிற்காலத்தில் ஹதீஸ்கள் தொகுக்கப்பட்டமைக்கான காரணங்களை எடுத்துக்காட்டுக.
- (iv) நபி (ஸல்) அவர்களது காலத்தில் ஹதீஸ்கள் எவ்வாறு பாதுகாக்கப்பட்டன ?

## பகுதி II

**4.** (i) ஹஜ்ஜின் வரலாற்று முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டுக.
(ii) ஹஜ் ஒரு சர்வதேச மகாநாடு என்பதை எவ்வாறு நிருபிப்பீர் ?

**5.** இமாம் மாலிக் (ரஹ்) பற்றி பின்வரும் தலைப்புகளில் விபரிக்குக.
- (i) இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் சுருக்கமான வாழ்க்கை வரலாறு
- (ii) சட்டத்துறைக்கு இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் பங்களிப்பு

**6.** (i) இபாதத் பற்றிய இஸ்லாமிய கண்ணோட்டத்தை விளக்குக.
(ii) முஸ்லிம்களிடையே நல்லொழுக்கத்தைக் கட்டியெழுப்புவதற்கு இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகள் எவ்வாறு உதவுகின்றன என்பதை விளக்குக.

**7.** (i) இஸ்லாமிய பொருளாதார அமைப்பில் தடைசெய்யப்பட்டுள்ள கொடுக்கல் வாங்கல் முறைகளை விபரிக்குக.
(ii) இஸ்லாம், வறுமை ஒழிப்பிற்கு முன்வைத்துள்ள தீர்வுகளைக் குறிப்பிட்டு, அவை எவ்வாறு வறுமை ஒழிப்பிற்குப் பங்களிப்புச் செய்கின்றன என்பது பற்றி விளக்குக.

**8.** பின்வரும் விடயங்களை விவரிக்குக.
- (i) தவ்ஹீத் மனித வாழ்வில் ஏற்படுத்தும் தாக்கங்கள்
- (ii) அஜ்னபி-மஹ்ரமீ வரையறைகளைப் பேணுவதன் அவசியம்

* * *